# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ 10/-
அரையாண்டு சந்தா ரூ 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
V. தமிழ்ராசன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 | 1-11-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை | இதழ் 12, 13


# நாதசுர சக்கரவர்த்தி டி. என். இராசரத்னம் பிள்ளை இசைச்சுட்டி

## சிலம்புச்செல்வர் ம. பொ. சி. வெளியிட்டார்

மறைந்த நாதசுர மேதை திருவாவடுதுறை இராசரத்னம் பிள்ளையவர்கள் வாசித்த கச்சேரி பகுதி ஒன்றினை இசைச் சுட்டியாக (கேசட்) T. R. விசுவநாதன் எக்கோ காஸட் கம்பெனி வெளியிட்டுள்ளார்கள். இதன் வெளியீட்டு விழாவினை இராசரத்னம் பிள்ளையின் மகளான T. N. R. வனஜா சுப்ரமணியம் சென்னை மயிலை கற்பகாம்பாள் திருமண மண்டபத்தில் 27-10-82 அன்று மிகச் சிறப்பாக நடத்தினர். திருவாளப்புத்தூர் T. S. பாலு நாதசுரக் கச்சேரியோடு விழா தொடங்கியது. பத்மபூஷன் வீணை S பாலசந்தர் தலைமை வகிக்க பழம் பெரும் நடிகர் M. K. இராதா முன்னிலையில் தமிழக சட்ட மன்ற மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் இசைச் சுட்டியை வெளியிட நல்லி நா. குப்புசாமி செட்டியார் பெற்றுக் கொண்டார்.

இசைச்சித்தர் சிதம்பரம் ஜெயராமன், இராணி அண்ணாதுரை, அன்பு வேதாசலம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். வீணை S. பாலசந்தர் T. N. R. விழாவினை அரசாங்கம் முன்வந்து நடத்த வேண்டும் என விடுத்த வேண்டுகோளை டாக்டர் ம. பொ. சி. உடனே ஏற்று ஆவன செய்வேன் என்றார். விழாவில் ஏராள கலைஞர்கள், ரசிகர்கள் கலந்து சிறப்பித்தனர். 50 இசைச்சுட்டிகள் வரை அங்கேயே விற்பனையானது.



இசைச்சுட்டி விலை ரூ 40/- கீழ்கண்ட பாடல்கள் அடங்கியுள்ளது!

சுத்த சீமந்தனி இராக 'ஜானகி ரமணா'
பைரவ இராக 'மரியாத காதய்யா'
கல்யாணி இராகத்தில் 'சிவகுருபரனே'
சண்முகப்பிரியா பல்லவி, இராகமாலிகை

இசைச் சுட்டி விற்பனையாளர்களிடமும், எக்கோ காஸட் கம்பெனி, 15 மசூதித்தெரு, சென்னை - 4 விலாசத்திலும் கிடைக்கும் 'இயலிசை' இதழ் மூலமும் பெறலாம்.

## 'இயலிசை' டிசம்பர் 82 இசைவிழா சிறப்பிதழ்



- அதிக பக்கங்கள்
- சென்னை நகரில் நடக்கும் இசைவிழா கச்சேரிகள் விபரம்
- விழாவில் விருது பெரும் கலைஞர்களின் வாழ்க்கைக் குறிப்புகள்.
- 'ஆடலரசி அபிராமி' கலை தொடர் கதையின் ஆரம்பம்.
- இசை பயிலும் மாணவர்களுக்கான பயனுள்ள செய்திகள்.
- இன்னும் இசையுலகினைப் பற்றிய அரிய செய்திகள்.

அனைத்தும் இடம் பெறும் தனியிதழ்கள் இசை விழா நடைபெறும் இடங்களிலும் புத்தக்கடைகளிலும் கிடைக்கும். தனிப்பிரதி 60 காசுகள் தான்!

## இசையமைப்பும் வெற்றிக்கு 'துணை'யே !

பிரகாஷ் பிக்சர்ஸ் தயாரித்துள்ள துணை வெற்றிப் படத்தில் நடிகர் திலகம் சிவாஜி, V. K R. சரிதா, ராதா, திலீப் மற்றும் பலர் சிறம்பட நடித்துள்ளனர், சத்தான கதை கிடைத்து விட்டதால் துரைக்கு சொல்ல வேண்டுமா? நன்றாக டைரக்ஷன் செய்துள்ளார். சிவாஜியை இன்றுள்ள பருவத்தில் எப்படி பயன்படுத்திக் கொண்டால் சிறப்பாக இருக்கும் என்பதனை நல்ல முறையில் காட்டியுள்ளார்கள், பட வெற்றிக்கு சங்கர்-கணேஷ் இசையமைப்பும் துணையாக உள்ளது. 'காற்று நடந்தது மெல்ல மெல்ல' பாடல் திரும்ப கேட்கும் படி உள்ளது. கதை ஆசிரியருக்கு பாராட்டு!



## ஒப்பிலியப்பன் கோவில் அருள்மிகு வேங்கடாசலபதி சுவாமி திருக்கோவில் திருக்கல்யாண விழா இசை நிகழ்ச்சிகள்

அக்டோபர் 82

| | | | |
|---|---|---|---|
| 26. மாலை | 4-30 | T. K. சின்னப்பாபிள்ளை, T. R ராமலிங்கம்பிள்ளை குழுவினர் | நாதசுரம் |
| ,, | 6-30 | நெய்வேலி ரெங்கநாயகி கோபாலன் குழுவினர் | இன்னிசை |
| ,, | 8 | C. சிட்டிபாபு குழுவினர் | வீணை |
| 27. ,, | 6-30 | கும்பகோணம் சம்பத் ,, | இன்னிசை |
| ,, | 8-30 | பேராசிரியர் T. N. கிருஷ்ணன் ,, | வயலின் |
| 28. ,, | 6-30 | குடந்தை பத்மா ,, | இன்னிசை |
| ,, | 9 | திருப்பாம்புரம் சகோதரர்கள் நாதசுரம் T. K. S சுவாமிநாதன், T. K. S. மீனாட்சி சுந்தரம் | |
| 29. ,, | 6-30 | தஞ்சை T. R. கமலா மூர்த்தி குழுவினர் | இசை சொற்பொழிவு |
| ,, | 8-30 | மதுரை T. N. சேஷகோபாலன் ,, | இன்னிசை |
| 30. ,, | 6-30 | T. R ராஜகோபால் ,, | நாதசுரம் |
| ,, | 8-30 | K. வீரமணி, ராதா ,, | இன்னிசை |
| 31. ,, | 6-30 | T N ராமசந்திரன் ,, | ,, |
| ,, | 8-30 | குன்னக்குடி வைத்தியநாதன் ,, | வயலின் |
| நவம்பர் | | | |
| 1. ,, | 6-30 | திருச்சேறை திருமங்கைதாசன் | விகடம் |
| ,, | 8-30 | மாயூரம் கணநாதர் சபை | பொம்மலாட்டம் |
| 2. ,, | 6-30 | சிதம்பரம் செல்வர்கள் D. சுவாமிநாதன் D. பாலசுப்பிரமணியம் குழுவினர் | வயலின் |
| ,, | 9-00 | மதுரை சோமசுந்தரம் குழுவினர் | இன்னிசை |
| 3 ,, | 6-30 | P. S. செல்லதுரை & G. சுவாமிநாதன் | நாதசுரம் |
| ,, | 8-30 | திருச்சூர் V. இராமசந்திரன் குழுவினர் | இன்னிசை |
| 4. ,, | 6-30 | மன்னை P குமார் அய்யர் | சொற்பொழிவு |
| ,, | 8-30 | டாக்டர் N. ரமணி குழுவினர் | புல்லாங்குழல் |
| 5. ,, | 6-30 | குடந்தை நரசிம்ம ஆச்சாரி | சொற்பொழிவு |
| ,, | 8-30 | தருமை அ. கோவிந்தராஜன் குழுவினர் | நாதசுரம் |
| 6. ,, | 6-30 | சீர்காழி கோவிந்தராசன் ,, | இன்னிசை |

## நாதசுரக்கலைஞர் காருகுறிச்சி P. அருணாசலம் படத்திறப்பு 'நாகஸ்வராவளி' முதலாண்டு விழா !

நாதசுர இசைக்கச்சேரிகளை யே நடத்தி வரும் நாகஸ்வராவளி சபையின் முதலாண்டு விழா வரும் 25-11-82 மாலை சென்னை மயிலை சீனிவாச சாஸ்திரி ஹாலில் நடைபெற உள்ளது. விழாவில் பல பெரு மக்கள் கலந்து கொள்வர். மறைந்த நாதசுர மேதை காருகுறிச்சி P. அருணாசலம் அவர்கள் திரு உருவப்படத்தை அவர்கள் திறந்து வைப்பார்கள். நாதசுரக் கலை பற்றி ஆராய்ச்சி ஏடு ஒன்றை மறைந்த நாதசுரக்கலைஞர் குளிக்கரை பிச்சையப்பா பிள்ளை பேத்தி திருமதி மலர்விழி M. music வழங்குவார்.

அன்று நாதசுர வித்வான் பழனி S. லட்சுமி நரசிம்ம அய்யர் அவர்களுக்கு 'நாதஸ்வர சுரபி' என்ற பட்டமளித்து பாராட்டு விழாவும், தொடர்ந்து அவரது நாதசுர இசைக்கச்சேரியும் நடைபெற உள்ளது.

## குடந்தை படைவெட்டி மாரியம்மன் பால்குட விழா குடந்தை தேவி பிரசாத் வயலின் கச்சேரி !

கும்பகோணம் பிரபல வயலின் கலைஞர் ஜனார்த்தனம் பிள்ளையின் மகன் குடந்தை தேவி பிரசாத். இவர் தனி வயலின் கச்சேரிகள் ஏராளமாக நடத்தி புகழ் பெற்று வருகின்றார். இவரது கச்சேரி குடந்தை அருள்மிகு படைவெட்டி மாரியம்மன் 11வது ஆண்டு பால்குட அபிஷேக ஆராதனை விழாவில் கடந்த 10-10-82 அன்று சிறப்பாக நடைபெற்றது. ஏராள ரசிகர்கள் கலந்து கொண்டு இவரை வருங்கால குன்னக்குடி என்று பாராட்டினார்கள். இவரது நிகழ்ச்சியில் குடந்தை பத்மரூபன், — மிருதங்கம், திருப்புகலூர் S. வெங்கட்ரமணி – கடம், நாச்சியார் கோவில் சிங்காரம் — கஞ்சிரா, மணல்மேடு S. மாதவன் — முகர்சிங் வாசித்து கச்சேரியை சிறப்பித்தனர்.

## அகில இந்திய வானொலி இசை விழா (ரேடியோ சங்கீத சம்மேளனம்)

வருடம் முழுவதும் இசை நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து வழங்கும் அகில இந்திய வானொலியும் வருடத்தில் ஒரு முறை இசை விழா ஒன்றினை நடத்தி சில கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து நாட்டின் பல நகரங்களில் ரசிகர்கள் முன்னிலையில் அவர்கள் இசை நிகழ்ச்சிகளை நடத்தி அதனை ஒலிபரப்புகின்றது. இந்த சிறப்பு நிகழ்ச்சிகள் சகல வானொலி நிலையங்களும் அகில பாரத நிகழ்ச்சிகள் போன்று ஒலிபரப்பும் கலைஞர்களுக்கும் அதிக ஊதியம் இதற்கு வழங்குகின்றார்கள்.

இவ்வாண்டு கடந்த அக்டோபர் 9, 10 தேதிகளில் இசை விழாவினை டெல்லி, பம்பாய், கல்கத்தா, சென்னை, மைசூர், பெங்களூர், திருச்சி, ஹைதராபாத், கோழிக்கோடு முதலிய ஊர்களில் ரசிகர்கள் முன்னிலையில் நடத்தினர். இந்நிகழ்ச்சிகள் 23-10-82 முதல் 23-11-82 வரை இரவு 10 மணியளவில் வாரத்தில் 4 நாட்கள் சகல வானொலி நிலையங்களிலும் ஒலிபரப்புவார்கள். மேலும் விபரங்கள் 'வானொலி' நிகழ்ச்சிகள் இதழில் காணலாம்.

## 'சிவப்பு ஆற்றிலே நீல மலர்' D. வில்லியம்சு இசையில் மணக்கின்றது

விரைவில் வெளிவர இருக்கும் K. S. K. பிலிம்சின் சிவப்பு ஆற்றிலே நிலமலர் என்ற படத்தில் லட்சுமிஸ்ரீ, ரீனா, சுருளி ராஜன், திருக்குமரன் மற்றும் ஏராள புதுமுகங்கள் நடித்துள்ளனர். கிராம சூழ்நிலை கதை ஒன்றினை அமைத்து நல்ல படப்பிடிப்பு மூலம் சுறுசுறுப்பாக இயக்கி உள்ளனர், டைரக்டர் தாமோதர - ராகவன் B. com. மதுரை உடையப்பாவின் இசை நாடக காட்சியும் ஒன்றுபொருத்தமாக புகுத்தியுள்ளார். இசை D. வில்லியம்சு, இவர் பல இசையமைப்பாளரிடம் இருந்து நிரம்ப அனுபவம் உடையவர். பாடல்களிலும் பின் இசையிலும் அனுபவம் பேசுகின்றது. 'தேவா' 'ஆடிக்காற்று' இரண்டு பாடல்கள் கேட்பதற்கு இனிமையாக உள்ளன.

இயலிசை



## திருத்தமும், வருத்தமும்

சென்ற இதழில் செல்வன் K. ஸ்ரீராமனின் மிருதங்க அரங்கேற்ற செய்தியில் ஸ்ரீராமனின் குருநாதர் இராமநாதபுரம் M.N. கந்தசாமி அவர்கள் காலஞ்சென்ற மிருதங்க மேதை பழநி சுப்பிரமணியபிள்ளை அவர்களின் மாணவர் என்பதற்கு பதில் மருமகன் என்று தவருக அச்சாகி உள்ளது தவறுக்கு வாசகர்கள் மன்னிக்க வேண்டுகின்றோம்.

---

உங்களின் 'இயலிசை' இதழ்கள் பல எனக்குப் கிடைத்தன. இதுகாறும் இத்துறையில் பலனோக்கருதாமல் சேவை மனப்பான்மையில் கலைக்கு செய்யும் பெருந்தொண்டு என்றே இதனை நான் கூறுவேன். இசைப்பரம்பரையில் வந்த சிறப்பாசிரியரான உங்கள் முயற்சி மென்மேலும் செழிப்புற்றோங்க கலைமகளையும், திருமகளையும் வேண்டித்துதிக்கின்றேன். சங்கீதபூஷணம் P. S. அழகர்சாமி, வளவனூர்.

---

தாங்கள் மாதந்தவருமல் அனுப்பி வரும் இயலிசை இதழை பெற்றுக் கொண்டிருக்கின்றேன், பயனுள்ள பல செய்திகள் வெளிவருவது பற்றி மிக்க மகிழ்ச்சி. இயலிசை மென்மேலும் வளர்ச்சி அடைந்து சிறப்பு பெற இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

-பத்மஸ்ரீ ஷேக் சின்ன மௌலானா, நாதசுரம், ஸ்ரீரங்கம்.

---

நமது இயலிசைப் பணி இனிது ஓங்க வேண்டுகிறேன். இயலிசை ஆரம்ப காலம் முதல் எனக்கு வரப்பெற்று அறிய பெரிய இசை உலகின் அனுபவங்களை அடைந்து ஆனந்தம் அடைந்து வருகிறேன்.

— அருள் இன்னிசை மாமணி
மழையூர் S. சதாசிவம்
622301

## தவத்திரு சுவாமி இராமதாசர் 67 வது பிறந்த தின விழா
## திருவேற்காட்டில் சிலை திறப்பு விழா !

திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் ஆலயத்தின் புகழ் வளரவும், திருப்பணிகள் நடக்கவும் இன்று தமிழகத்தின் முதன்மையான பத்து கோவில்களில் ஒன்றாக திகழவும் செய்தவர் தேவி உபாசகர் தவத்திரு சுவாமி இராமதாசர். இவர் எல்லோரிடமும் அன்பாகவும் எளிமையாகவும் பழகுபவர் பல இசை கலைஞர்களுக்கு ஆதரவு அளித்தவர். நமது இயலிசை இதழுக்கு ஆசியும் ஆதரவும் தந்தவர். இவரது 67 வது பிறந்த தின விழா கடந்த 8-10-82 அன்று திருவேற்காடு ஜீவரத்தினம்மாள் மேல்நிலைப் பள்ளிக்கூடத்தில் தமிழிசைச் சங்க காவலர் டாக்டர் ராசா சர் முத்தையா செட்டியார் தலைமையில் நடந்தது. சுவாமிகளின் திருஉருவச் சிலையை டாக்டர் ம. பொ. சிவஞானம் திறந்தார். அமைச்சர் இராம வீரப்பன் பள்ளி புது கட்டடத்தைத் திறந்தார். இந்து அறநிலையத்துறை ஆணையாளர் R. சண்முகசிகாமணி I.A.S. சாமி அவர்களுக்கு பொன்னாடை போர்த்த சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர் C. K. கரியாளி I. A. S. பரிசுகள் வழங்கினார் முன்னாள் நடுவர் N. கிருஷ்ணசாமி ரெட்டியார் விழா மலரை வெளியிட்டார். நடுவர் S. சாமிக்கண்ணு கி. வா. ஜ., பெ. மருதப்பிள்ளை மயிலை குருஜி, திருவேற்காடு அறங்காவலர் சர்வேசுவரராவ் உட்பட பலர் வாழ்த்துரை, சிறப்புரை வழங்கினர்.

## புதுக்கோட்டை மாவட்ட சன்மார்க்க சங்க வள்ளலார்
## அவதார தினவிழா

'தமிழிசைக்கு ஏராள விருத்தப் பாடல்களையும், கீர்த்தனைகளையும் வழங்கிய வடலூர் வள்ளல் பெருமாள் 160 வது அவதார தினவிழாவினை புதுக்கோட்டை மாவட்ட சமரச சுத்த சத்திய சன்மார்க்க சங்கம் புதுக்கோட்டை வள்ளலார் ஞானசபையில் 17-10-82 அன்று காலை முதல் இரவு வரை நடத்தினர். ஏராள சன்மார்க்க அன்பர்களும் பேராசிரியர் சத்திய சீலன் அவர்களும் கலந்து உரையாற்றினர். இசை மாமணி மழையூர் சதாசிவம், காரைக்குடி அன்னபூரணி ஆச்சி குழுவினர், ஜோதி ஆறுமுகம் ஆகியோர் அருட்பா இசைவழங்கி விழாவினை சிறப்பித்தனர். சங்கத்தலைவர் நா. முத்துகிருஷ்ணன் வரவேற்புரையும் செயலர் சதா. மாணிக்கம் நன்றியுரையும் செய்தனர்.

## திருவாரூர் நவராத்திரி இசை நிகழ்ச்சிகள் தஞ்சை மாவட்ட
## மகளிர் கலை நிகழ்ச்சிகள் !

திருவாரூர் அருள்மிகு தியாகராயர் ஆலயத்தில் நவராத்திரி விழாவில் பல தஞ்சை மாவட்ட பாடகிகள் கலந்து இன்னிசை வழங்கி விழாவினை நிறைவு செய்தனர். முதல் நாள் திருவாரூர் T. S. ராசரத்தினம் நாதசுர இன்னிசையுடன் தொடங்கியது தொடர்ந்து மற்ற நாட்களில் குடந்தை சுசீலா, திருவிடைமருதூர் S. பாகீரதி, தஞ்சை சகோதரிகள் கிரிஜா - மைதிலி குடந்தை V. B. இராஜேசுவரி, குடந்தை கோகிலாம்பாள், சென்னை கல்பகம் ராமன் ஆகியோர் கச்சேரிகளும் தஞ்சை J. ஜெயந்தி இசை சொற்பொழிவும், குடந்தை மாணவிகள் நடனமும் நடந்தது.

(தகவல் திருவாரூர் S. ஜெயபால் தினமலர் நிருபர்)

## மிருதங்க சக்கரவர்த்தி' யாக சிவாஜி !
## கலைஞானம் தயாரிக்கும் படத்தில்

பைரவி பிலிம்சார் மிருதங்கக் கலைஞர் ஒருவரதுவாழ்க்கையை திரைப்படமாக தயாரிக்க உள்ளனர். படப்பெயர் மிருதங்க சக்கரவர்த்தி' மேதையின் வேடத்தில் சிவாஜி கணேசன் நடிக்க K. V. மகாதேவன் இசையமைக்கின்றார் இதன் படபிடிப்பு சமீபத்தில் கன்னியா குமரி மாவட்டத்தில் நடந்தது. கதை வசனம் டைரக்சன் தயாரிப்பு கலைஞானம்.

## 'முள் இல்லாத ரோஜா' விற்கு புது இசையமைப்பாளர் !

ஓம் சரவணபவ கிரியேஷன்ஸ் தயாரிக்கும் முள் இல்லாத ரோஜா படத்திற்கு முரளி ராஜ் என்ற புது இசையமைப்பாளரை ஒப்பந்தம் செய்துள்ளனர். ஜோதி, பாரதி, சிந்தாமணி பிரபாகர் நடிக்கும் இப்படத்திற்கு கதை வசனம் டைரக்ஷன் K ராம்ராஜ்.

## சைதை காரணீசுவரர் புரட்டாசி கிருத்திகை
## விழா சிறப்பு நாதசுரக் கச்சேரி ஏற்பாடு

சென்னை சைதாப்பேட்டை அருள்மிகு காரணீசுவரர் திருக்கோவிலில் வரும் 6-10-82 புரட்டாசி கிருத்திகை யன்று மாலை மயில் வாகனத்தில் முருகப் பெருமான் திருவீதி உலா நடந்தது. இவ்விழாவிற்கு சிறப்பு நாதசுர நிகழ்ச்சியாக திருவாளபுத்தூர் T. K. வேணுபிள்ளை, T. A. சீனுவாசன் இவர்கள் அழைக்கபட்டிருந்தனர் மாயூரம் S. பாலு, ஆச்சாள்புரம் S. சங்கரன், நாங்கூர் R. ராமுபிள்ளை, வேலூர் S. M. சுப்ரமணி இவர்கள் தவில்கள் வாசித்தனர். விழாவிற்கான ஏற்பாடுகளை திருக்கோவில் நாதசுர கலைஞர் B. சீனுவாசன் சகோதரர்கள் செய்திருந்தனர்

## 'டப்பிங்' பட பாடலாசிரியருக்கு பாராட்டு !
## பாரதி கலைக்கழகம் 30ம் ஆண்டு விழா !

சென்னை சைதாப்பேட்டை அருள்மிகு சுப்ரமணிய சுவாமி ஆலயத்தில் நடைபெற்ற பாரதி கலைக்கழக 30ம் ஆண்டு விழாவில் பாடலாசிரியர், வசன கர்த்தாவாக பல மொழி மாற்ற 'டப்பிங்' படங்களுக்கு பணியாற்றிய கவிஞர் கு. தேவநாராயணனைப் பாராட்டி 'கவிமாமணி' என்ற பட்டத்தை சென்னை உயர்நீதி மன்ற நடுவர் திரு S. சாமிக்கண்ணு வழங்கினார். தமிழக சட்ட மன்ற மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் சிறப்புரையாற்றினார் கவிஞர் நல்ல பாடகருமாவார், இவருக்கு தமிழக அரசு 'கலைமாமணி' விருதும் வழங்கியுள்ளனர்.

விழாவில் கலைக்கழகத்தலைவர் இரா. சுராஜ் அனைவரையும் வரவேற்றார். T. K. S. கலைவாணன், பாரதியார் கொள்ளுபேரன் ஆகியோர் பாரதி பாடல்களைப் பாடினர். ஏராளமான கவிஞர்கள், பொதுமக்கள் கலந்து கொண்டனர்.

## சென்னை மாவட்ட இசை வேளாளர்கள் சங்க
## நிர்வாகிகள் தேர்வு

அக்டோபர் 10ந்தேதியன்று சென்னை மந்தவெளியில் சென்னை மாவட்ட இசை வேளாளர்கள் சங்க பொதுக்குழு கூட்டம் நடைபெற்றது. அதில் 1982-83 ஆண்டுக்கான நிர்வாகிகள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். நடன ஆசிரியர் K. N. பக்கிரிசாமி - தலைவர் தஞ்சாவூர் உபேந்திரன், M. முனியாண்டிபிள்ளை, T. N. R. வனஜா சுப்ரமணியம் - துணைத்தலைவர்கள் குத்தாலம் P. மீனாட்சி சுந்தரம், சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம், செயலாளர்கள், T. R சீனுவாசன், பொருளாளர் இவர்களே 'முத்தமிழ் பேரவை' கலைவிழாவினையும் நடத்துவார்கள்.

இச்சங்கம் சமீபத்தில் தியாகராய நகர் சிவா - விஷ்ணு ஆலயத்தில் மழை வேண்டி இசை நிகழ்ச்சிகள் நடத்தினர். இசைச் சித்தர் சிதம்பரம் ஜெயராமன், சூலமங்கலம் சகோரிதகள் மற்றும் சமுதாயக் கலைஞர்கள் பலர் பாட அன்றிரவே மழை கொட்டியது - குறிப்பிடத்தக்கது.

## மீண்டும் மதுரை சோமு 'சக்கரவாகம்' படத்தில் நடிக்கின்றார்

பிரபல இசைவாணர் மதுரை S. சோமசுந்தரம் தேவர் படமான 'தெய்வம்' படத்தில் பாடி நடித்தார், பின்னர் 'தோடிராகம்' என்ற படத்தில் நடிக்க இருந்தார். தற்பொழுது ரமாதேவி மூவிசு தயாரிக்கும் 'சக்கரவாகம்' என்ற படத்தில் நடிக்க உள்ளார். K. V. மகாதேவன் இசையமைக்கின்றார். 'சக்கரவாகம்' என்பது ஒரு தாய் இராகத்தின் பெயரே. சக்கரவாகம் என்ற ராஜபட்சி பறப்பது போன்ற சலனம் உடைய இராகம் இது ஆதலால் சக்கரவாகம் என்ற பெயர் பெற்றது என்று இசைவாணர்கள் கூறுவார்கள்,

இப்படத்தின் கதை வசனம் டைரக்சன் பொறுப்பினை சிற்பி ஏற்றுள்ளார். தேங்காய் சீனுவாசன், டெல்லி கணேசு, K. K. சவுந்தர், உசிலைமணி, சந்திரன் பாபு, மனோரமா மற்றும் பலர் நடிக்க உள்ளனர்.

TN/MS(s)/260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras-26 Published and Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam, MADRAS-600 024.




[illegible] 16, [illegible]
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை 28

## கலர் தொலைகாட்சி V. G. P. முயற்சி

வியாபார உலகில் பல புரட்சியை செய்து வருபவர்கள் VGP சகோதரர்கள். அவர்கள் தயாரிக்கும் விடியோ வீடியோ ஒளி நாடா டேப்புகள் வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றது. இதனால் இந்தியாவிற்கு ரூ 1. கோடி வரை அன்னியச் செலவாணி கிடைக்கும். தற்பொழுது அவர்கள் ஜெர்மனி நாட்டின் கூட்டுறவுடன் இந்தியாவிலேயே கலர் TV தொலைக் காட்சி தயாரிக்க திட்டமிட்டுள்ளனர். இவர்கள் முயற்சி வெற்றி பெற்றால் இங்கேயே குறைந்த விலையில தரமான கலர் TV கிடைக்கும்.

## தவில் கலைஞர் திருவொற்றியூர் பாலசுந்தரத்திற்கு பாராட்டு விழா

திரு வொற்றியூர் A. பால சுந்தரம் தவில் மேதை வலங்கை A. சண்முகசுந்தரம் அவர்கள் மாணவர். இவர் பல வருடங்களாக பல நாதசுரக்கலைஞர்களுக்கு தவில் வாசித்து வருகின்றார். இவருக்கு திரு வெற்றியூர் நகர மக்கள் கடந்த 16-10-82 அன்று ஓர் பாராட்டு விழா நடத்தினர். விழாவிற்கு உயர் நீதிமன்ற நடுவர் S சாமிகண்ணு தலைமை வகித்து பாலசுந்தரத்திற்கு பொன்னாடை போர்த்தினர். பாடகர் டாக்டர் M பால முரளிகிருஷ்ணா தங்கபதக்கம் அணிவித்தார். இயல் இசை நாடக மன்ற செயலாளர் DV நாராயணசாமி தவில் இசைமணி என்ற பட்டத்தை அளிக்க. இவரது குரு வலங்கைமான் சண்முகசுந்தரம் அவர்கள் வெள்ளி தவில் கழி அளித்து ஆசிகள் வழங்கினர்.

விழாவில் டாக்டர் N. ரமணி புல்லாங்குழல் கச்சேரிவலங்கைமான் சிறப்புத்தவிலுடன் நடைபெற்றது இரவு வலங்கைமான் S A. சௌந்தரராசன் நாதசுரக் கச்சேரிக்கு அரித்துவார மங்கலம் A. K. பழனி வேல், திருவாளப்புத்தூர் T. A. கலிய மூர்த்தி இவர்கள் அமர்க்களமாக தவில் வாசித்து விழாவினை நிறைவுச் செய்தனர்.

## தமிழ்க் கலைஞர்களுக்கு வெளி மாநில பரிசுகள்

- மேற்கு வங்காள அரசு வீணைக்கலைஞர் S. பாலசந்தருக்கு விஸ்வ உடன் பாயன சம்சத். (பாரத சங்கீத மேதை) என்ற பட்டத்தை டெல்லியில் விரைவில் விழா நடத்தி வழங்க உள்ளது.
- கர்நாடக மாநில சங்கீத சபா (மியூசிக் அகடமி) பெங்களூரில் 15—11—82 அன்று நடைபெறும் விழாவில் வயலின் கலைஞர் லால்குடி ஜெயராமன் அவர்களுக்கு ரூ. 5000/- பரிசும் தாமிர பட்டயமும் வழங்க உள்ளது. இது போன்ற பரிசு இச்சபை தருவது இதுவே முதன்முறையாகும் கலைஞர்களுக்கு இயலிசையின் வாழ்த்துக்கள்!

### இயலிசை விளம்பரக் கட்டணம்

| | |
|---|---|
| முழுப்பக்கம் | ரூ. 300/- |
| அரைபக்கம் | ரூ. 150/- |
| கால்பக்கம் | ரூ. 75/- |
| குறைந்தளவு | ரூ. 50/- |

தொடர் விளம்பரங்களுக்கும், கலை விளம்பரங்களுக்கும் கட்டண சலுகை உண்டு. இயலிசை டிசம்பர் 82 சிறப்பிதழுக்கும் இதே கட்டணம் தான்.

### விற்பனையாளர் தேவை

இயலிசை இதழுக்கு விற்பனையாளர்கள் (ஏஜண்ட்) தேவை ஒரு பிரதிக்கு 30 காசுகள் விதம் முன் பணம் கட்ட வேண்டும்.

எங்கள் செலவில் பிரதிகள் அனுப்பபடும்.

மேலும் விபரங்களுக்கு எழுதவும்.

## திருவையாறு தியாகராஜ ஆராதனை இசை விழா
## தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். துவக்கி வைக்கின்றார்

ஏராள பாடல்களை (கீர்த்தனம்) தெலுங்கில் இயற்றி பல இராகங்களில் அமைத்து கர்நாடக இசையை வளர்த்தவர் தியாகராஜ சுவாமிகள். இவர் தஞ்சை மாவட்டம் திருவையாறில் 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து பகுள பஞ்சமி திதியில் இறைவன் திருவடி சேர்தார். இவரது நினைவுநாள் — குரு பூஜையை — ஆராதனை இசை விழாவாக வருடாவருடம் தை மாதத்தில் திருவையாற்றில் இவர் சமாதியருகே கொண்டாடுகின்றனர் தியாக பிரம்ம மஹோற்சவ சபையார்.

வரும் 1983-ம் ஆண்டு ஜனவரி 29 முதல் பிப்ரவர் 2 தேதிவரை இவ்விழா நடைபெற உள்ளது. வழக்கப்படி ஏராள இசை வாணர்கள், நாதசுரக் கலைஞர்கள் கலந்து கொண்டு அவரது பாடல்களை இசைப்பார்கள். இவ்வாண்டு விழாவினைத் துவக்கி வைக்க தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. ஆர். வருவது தனிச் சிறப்பாகும். மற்ற விபரங்களுக்கு இச்சபையின் கீழ் கண்ட செயலாளர்களுடன் தொடர்பு கொள்ளலாம்.

கிளாரினட் A. K. C. நடராசன்,
தில்லைநகர்,
திருச்சி,

குன்னக்குடி வைத்தியநாதன்,
5A, இராசாதெரு, சென்னை-28

## புல்லாங்குழல் N. ரமணி நடத்தும் குடமுழுக்கு விழா

திருவாரூர் தெற்கு மட விளாகத்தில் இருந்த ஸ்ரீ வல்லப மகா கணபதி கோயில் பல வருடங்களாக பூஜை இல்லாமல் சிதைந்து இருந்தது. இக்கோவில் பிரபல புல்லாங்குழல் கலைஞர் டாக்டர் N ரமணி அவர்கள் குடும்பத்தை சேர்ந்த நிலத்தில் அமைந்திருந்தது. எனவே ரமணி அவர்கள் அதனைச் செப்பனிட்டு கும்பாபிஷேகம் நடத்த [illegible] கொண்டு சமீபத்தில் திருப்பணி தொடங்கி வரும் 7-11-82 காலை 7 மணிக்கு கும்பாபிஷேகம் நடத்த உள்ளார். பல நாதசுரக் கலைஞர், இசை வாணர்கள் நிகழ்ச்சிகளும் நடத்த உள்ளார்

## மதுரையும் தில்லையும்

மன்னுபு கழ்தந்த மாமது ரையில்!
மன்னர் போற்றிய மீனாட் சிசுந்தரர்!
நல்லிய லிசையும் நால்வரின் புகழும்
தொல்லரு மறையும் அன்ற ளித்தான்!
தில்லைப் பதிதந் தநல்தே வாரமும்
எல்லை நீங்கிய நல்லேழிசையும்!
மானிடர் போற்றும் வகைபோ முன்னே
மீனாட் சிசுந்தர னே! இன் றளித்தான்
பதுமை யெனஇருந் தபுது மையே
இதுவே செய்து எந்நா ளும் வாழி!

— புலவர் வெ. கல்யாணராமன்
திருப்பனந்தாள்

## மதுரை மாநகர் நவராத்திரி கலைவிழா

இவ்வாண்டு தமிழகத்திலேயே - தலைநகர் சென்னைக்கு போட்டியாக அமர்க்களமாக நவராத்திரிவிழாவினைக் கொண்டாடியது மதுரை மாநகரமே. ஏராள கச்சேரிகள் பல இடங்களில் நடந்தன. நமது சிறப்பு நிருபர் மதுரை நேரே சென்று விழாவில் கலந்து கொண்டார்.

அருள்மிகு மீனாட்சியம்மன் கோவிலில் தினமும் மூன்று நிகழ்ச்சிகள் மாலை 4 மணி முதல் இரவு 11 மணி வரை நடந்தன. மதுரை சோமசுந்தரம், M. R. விஜயா, சூலமங்கலம் சகோதரிகள், குன்னக்குடி வைத்யநாதன் - வலையப்பட்டி சுப்ரமணியம் (வயலின்-தவில்) சீர்காழி கோவிந்தராசன், K. வீரமணி - இராதா, இளையராசாகுழு T. M. சௌந்தரராஜன் இன்னிசை கச்சேரிகள் M. P. N. சேதுராமன், M. P. N. பொன்னுசாமி நாதசுரம் இவைகள் முக்கிய நிகழ்ச்சிகள். இளையராஜா நிகழ்ச்சிக்கு 'கீத வழிபாடு' என்று தனி சுவரொட்டி ஒட்டியிருந்தார்கள்' முன்னேர கச்சேரிகளில் பல பழைய பாடகர்கள், புது பாடகர்கள் பாடினர். வாரியார் சுவாமிகள் மூன்று நாட்கள் முன்னேரத்தில் இசை சொற்பொழிவு ஆற்றினர். நிகழ்ச்சிகள் ஏற்பாடுகளை அறங்காவலர் குழுதலைவர் V. N. சிதம்பரம் ஆர்வத்துடன் செய்திருந்தார். மக்களும் திரளாக வந்திருந்து ரசித்தனர்.

மதுரை அருள்மிகு கூடமலகர் பெருமாள் கோவிலிலும் தினசரி கச்சேரிகள். அங்கு சூலமங்கலம் சகோதரிகள். B. R. இராஜகோபாலன், வி. விஜயலட்சுமி - நீலாயதாட்சி, மதுரை சமரசம், மதுரை T N சடகோபன், மன்னை K. S சௌரிராஜன் புல்லாங்குழல், மதுரை சுவாமிநாதன் இசை நிகழ்ச்சிகளும், கிருபானந்தவாரியார், ராமமூர்த்தி பாகவதர் இசை சொற்பொழிவுகளும், கமுகுமலை இராமையா பிள்ளை நாதசுரக் கச்சேரியும் நடைபெற்றன.

மதுரையில் தலைமை வட்டார ரயில்வே அலுவலகம் உள்ளது. அதில் ஸ்ரீ சக்தி விநாயகர் ஆலயம் அமைந்துள்ளது. ரயில் ஊழியர்கள் அதில் சிறப்பாக நவராத்திரி கலை விழா, நடத்துகின்றனர், இவ்வாண்டு முதல் நாள் M. P. N சகோதரர்கள் நாதசுரத்திற்கு அரித்துவாரமங்கலம் பழனிவேல், திருவாளப் புத்தூர் கலியமூர்த்தி இவர்கள் சிறப்புத் தவில்கள் வாசித்து விழாவினை துவக்கி வைத்தார்கள். மற்ற நாட்களில் குமாரி A கன்னியாகுமரி-தனிவயலின், T. கல்லுப்பட்டி R. முத்தையா, திருப்பரங்குன்றம் A. P. ராஜா நாதசுரம், சிக்கல் சகோதரிகள் புல்லாங்குழல், மணி கிருஷ்ணசாமி, R, K. சூரியநாராயண - வீணை, T. N. கிருஷ்ணன் - ஸ்ரீராமன் இரு வயலின், பம்பாய் சகோதரிகள் கச்சேரிகளும்; மாஸ்டர் R. மாதவன் மதுரை T. கிருஷ்ணமூர்த்தி இவர்கள் முன்னேர கச்சேரிகளும் நடந்தன. கச்சேரி ஏற்பாடுகளை நவராத்திரி விழாக் குழு செயலாளர் சிவராம கிருஷ்ணன் செய்திருந்தார், ஏராள ரயில்வே ஊழியர்களும் பொதுமக்களும் கலந்து கொண்டனர்.